உ

சிவமயம்

ஸ்ரீ அருணகிரிநாதர்

# அக்ஷரப்பாமாலை





ஸ்ரீ அருணாசலேஸ்வரர்.

1935.

உ
சிவமயம்

# ஸ்ரீ அருணகிரிநாதர்

# அக்ஷரப்பாமாலை.




இஃது

திருவண்ணாமலை தா. ஆராஞ்சி கிராமம் காணி[illegible]
திருக்கூட்டத் தலைவராயிருந்து திரு[illegible]
சந்நிதிமுறைத் திருவாய் மொழிந்து சிவனடியடைந்த

**மஹான் சுவாமிநாத சுவாமிகள்**

அருளிய புதல்வரும், திருவண்ணாமலை சுகர்நாடிசோதிடம்
ஸ்ரீமத் A. S. மயிலாசலப் பிள்ளை அவர்கள் சகோதரரும்,
வா. தா. பாகவெளி கிராமம் ஸ்ரீமத் செல்லப்பெருமாள் பிள்ளை
அவர்கள் மருகனுமான உயர் திருவாளர்

## A. S. முருகேசப் பிள்ளை அவர்களால்

இயற்றப்பட்டது.

## இவை

(காமக்கூர் வித்துவான் ஸ்ரீமத் மு. சுந்தர முதலியார்
அவர்களால் பார்வை யிடப்பெற்று)

ஸ்ரீ அருணாசலேஸ்வரர் தொண்டர் அடியார்க்கு அடியாராய்
விளங்கும் சிவநேசச் செல்வர்கள் பொருளுதவி நன்முயற்சியைப்
பெற்றது.

(ஆற்காடு ஸ்ரீ குகன் பிரஸ்ஸாரால்,
பதிப்பிக்கப்பட்டது.)

20—10—35.

உ

வேலுமயிலும் துணை.

## இந் நூலாசிரியர்



A. S. முருகேசப் பிள்ளை அவர்கள்.

94/1

## சிறப்புப்பாயிரம்

திருக்கைலாய பரம்பரைத் திருக்கோவலூர் ஆதீனம் திருப்பா திரிப்புலியூர் மடாலயம் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முகமெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்கள் மாணவராகிய குன்றத்தூர் திருநதிக்குன்றம் ஸ்ரீ சண்முகாநந்த கருணீகர்மடம் ஸ்ரீ சண்முக சரணாலய சுவாமிகள் அருளிய

வெண்பா

ஏழுவுலகோர் போற்றும் முதல்வனரு ணேசனருட்
சேவடிக்குப் பாமாலை செய்தணிந்தான்—பாவாணர்
போற்றுமாருஞ்சி புகழ்சாமி நாதன்சேய்
சாற்றும் முருகேசன் றான்.

---

ஆரியசமாஜ்ய பரம்பரை ஸ்ரீலஸ்ரீ சிரத்தானந்த சுவாமிகளின் மாணவராகிய விழுப்புரம் தாலுக்கா ஆசூர்கிருமத்தின் தவச்சாலை மடாலயத்தில் வசிந்து வரும் ஸ்ரீமத் நித்தியாநந்த சுவாமிகள் அருளிய எண்சீர்க்கழிநெடிலடி

சோதியரு ணேசருளந் தழைப்பயீண்டு தூயதமிழக்காப்பா
வியற்றினன் சீர்
பூதியமுங்களிக்க நாவலர்கண்மெச்ச புகழ்பதியா ருஞ்சியெனும்
அதனிற் சாமி
நாதனென்பான் கருணீகர் குலத்துவந்தான் நற்றவத்தா
லுதித்தமுரு கேசனம்மா
ஓதவரு மின்னூலுக் கொருநூலுந்தா னொப்பில்லை இருவினையு
மகற்றுந் தானே.

---

காமக்கூர் வித்துவான் ஸ்ரீமத் மு. சுந்தர முதலியாரவர்கள் இயற்றிய நேரிசை வெண்பா

பூவா ரருணகிரிப் புங்கவன்மேற் பாமாலை
நாவாரக் கண்டு நயந்தணிந்தான்—தேவாரும்
செல்வமிகு மாருஞ்சிச் சீர்கருணீ கக்குலத்தோன்
கல்வி முருகேசன் கற்று.

## சிறப்புப்பாயிரம்

### ஆர்க்காடு வித்துவான் ஸ்ரீமார் முத்து சு. மாணிக்கவாசகமுதலியார் அவர்கள் இயற்றிய வெண்பா

புயல்போற் புலவர்மொழி போற்றிமுத்தி நாடி
வயல்போய்ப் பரந்த வனத்தா—லுயல்போகா
ஆராஞ்சி நின்றருணை ஆண்டான்பா யாலைசொற்றான்
பேரான் முருகேசன் பெட்டு

---

### வாலாஜா மாஜி தமிழ் தலைமைப் புலவர் ஆ. கமலநாதமுதலியார் அவர்கள் பாடியது

பூவினிலேற்றமார்ந்த புகழ்ந்திடு மருணை நாதன்
தாவில்சீர் சரணம்போற்றுஞ் சழக்கிலா வறுபான்மூவர்
மேவிய பதவிவேண்டி விரும்பியக் காப்பாமாலை
நாவியந் திடவேசெய்தான் ஞாலமே யுய்யும் வண்ணம். 1

அன்னவன் யாவனென்னி லாயிரப்பாவாம் நூலை
சொன்னவன் மயிலைமஞ்ஞை யூர்பவன் துணைத்தாள் போற்றும்
பொன்னக ராராஞ்சென்னும் புகழமரூரில் வாழ்வோன்
தன்மையன் சாமிநாதன் தருதிசால் புதல்வனான. 2

முன்னவர் போற்றமிக்க முருகனார்நாம முற்றோன்
சொன்னநூல் தன்னிலுள்ள சுவைதனைச் செப்பி னுமும்
பன்னு முக்கனியின் சாறோ பகர்ந்திடு மமிர்தந் தானோ
என்னவென் றோதவேன்யான் இனித்திடுமின்ப மோர்ந்தே. 3

மாயையைப் பிணித்தான் றன்னைப் போற்றிடில் மலமறுத
மாயையை நசித்தவன்பர் மலரடிபோற்றின் மாயை
மாயமா யொழியுமென்றே மன்னியவுளத்தி லுன்னி
மாயமே யின்றி யன்பர் மகிமையை யறைந்திட்டானே. 4

---

## சிறப்புப்பாயிரம்

காவேரிப்பாக்கம் போர்டு உயர் கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர் வித்துவான் குன்றத்தூர் ச. பழனிவேற் பிள்ளை அவர்கள் பாடிய நேரிசை வெண்பா

தேமாலை யாளினிய சீர்த்தி யருணகிரிப்
பாமாலை யாற்றிப் பயனுற்ருன்—ஆமாலைத்
தொல்லடியார் ஆராஞ்சித் தோன்று முருகேசன்
நல்லடியார் தொண்டு நயந்து. 1

நன்னிதியா அன்பர் நயக்குந் திருமயிலைச்
சன்னிதிநூல் செய்த சதுரனென—மன்னி
வருசாமி நாதவேள் மைந்தன் றகுசீர்
கருணீக நற்குலத்தான் காண். 2

---

திருவோத்தூர் போர்டு ஹைஸ்கூல் தலைமைத் தமிழாசிரியர் வித்துவான் ஸ்ரீமத் ஔவை. சு. துரைசாமி பிள்ளை அவர்கள் பாடிய நேரிசையாசிரியப்பா.

செந்தமிழணங்கே செந்தமிழணங்கே
அந்தமில் சிறப்பின் செந்தமிழணங்கே
நின்னடித்தாமரை நேர்ந்தவளத்தின்
மன்னியசான்றோர் வளர்தருதொண்டை
நாட்டின் பெருமையும் நயனும் பிறவும்
காட்டியசெயல்களிக் காலத்துமுண்டெனக்
கண்டனம் அம்ம கவினியவளத்திற்
றண்டாச்சிறப்பின் றொண்டர்மல்கிய
அண்ணுமலைக்கணித் தெண்ணுமாராஞ்சி
பதியுறைசுவாமி நாதவுரவோன்
மதிமைசான்ற மாண்பினன் பயந்த
திருமகன் ஒருமுருகேசன் செறிந்த
அன்பாற்செஞ்சொ லாய்ந்தருணேசற்
கின்புசெய் அக்கரப்பாமாலையியற்றி
நின்ராட்கணியும் நேர்மையுற்
றின்றணிதெய்தின னேற்றருள்வாயே.

## சிறப்புப்பாயிரம்

வேலூர் ஊரீஸ் காலேஜ் தலைமைத் தமிழாசிரியர் உயர்திரு

C. S. இராஜாப்பிள்ளையவர்கள் எழுதியது

அறுசீர்க்கழிநெடிலடி.

பொருளறிந்த புலவர்புகழ் ஆராஞ்சிக்
கருணீகர் குலத்துப் போந்த
அருள்நிறைந்த செம்மனத்தோன் அறிவுமிகு
முருகேச னென்னு மன்பன்
தெருளொளியாம் அருணகிரி நாதனுக்கோர்
திகழ்ந்திடும் அக்கரப் பாமாலை
இருளிரிந்த சொன்மணியால் எழில்பெறவே
யணிவித்தான் இன்போ டம்மா

---

வேலூர் ஸ்ரீ மஹந்து தேவஸ்தானம் இந்து ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத் சோ. வீரபத்திரப்பிள்ளை அவர்கள்

பாடிய வெண்பா.

திருவருணை யீசன் றிகழக் கரமாலை
பொருவருசெஞ் சொல்லாற் புனைந்தான்—மருவுகலை
வல்லவனு ராஞ்சிநகர் வாழ்முருகே சன்மிகவு
நல்லவன்யா வர்க்கு நயந்து.

காவேரிப்பாக்கம், ஸ்ரீமான். உ. இராமசாமி முதலியாரவர்கள்
மாணவராகிய, உயர்திருவாளர். உபாத்தியாயர்
ம. வெ. உ. மன்னாரு நாயுடு அவர்களால், இயற்றியது.

அறுசீர்க்கழி நெடிலடி.

பூவுலகி லருணகிரி புகழடியா ரின்சுவைதேன்
பொருத்தி மிக்க
நாவூற அக்கரப்பா அந்தாதி முறையாக
நவின்றான் சீர்த்தி
பாவாணர் போற்றதி யாராஞ்சிப் பாகவெளி
பதிவாழ் வுற்றோன்
தேவாரஞ் சூட்டியருள் பெற்றிட்டான்
முருகேசன் றெளிவாய் மாதே.

---

இந்நூலாசிரியரிட தந்தைபால் உபதேசம் பெற்றவரும் இன்னவ
ரிட மருமகனும், சாணுங்குப்பம். மு.பொன்னுசாமிப்பிள்ளை குமா
ரரும் திருத்துருவமலை முருகன்பிள்ளைத் தமிழ்நூலாசிரியருமான
ஸ்ரீமான். C. S. P. இராமநாதப் பிள்ளை அவர்களாலியற்றிய

நேரிசை வெண்பா.

பூம்பொழில்சூழ் தென்னருணை பூதரமேற் சோதிதருஞ்
சாம்பசிவ னீன்ற தனிபயிலை — ஓம்பொருளின்
தன்மை யறியாச் சதுர்முகனைக் குட்டிபொருள்
சொன்னவன்செவ் வேண்மேற் றுதி.

துதிசந் நிதிமுறையைச் சொல்லிகதி சேரப்
பதியா யுபதேசம் பாலித் — திகழ்மாலை
சூட்டத்தா னீன்றநற் சுந்தரியை தந்துபுகழ்
நாட்டியவென் மாமன் நலம்.

நலம்புரிந்த வேள்சாமி நாதனரு ளோங்குங்
குலம்விளங்க வந்த குமரன் — தலமீ
தருணேசன் மீதடியா ரக்கரப்பா மாலை
முருகேசன் சொற்றான் முறை.

---

# இந்நூலாசிரியர் தமையனார் சுகர் நாடி ஜோதிடம்

திருவண்ணாமலை ஸ்ரீயத்

# A. S. மயிலாசலப் பிள்ளை

அவர்களால் இயற்றிய

கட்டளைக் கலித்துறை

முப்பழஞ் சாறுஞ் சருக்கரை செய்யும் முதிர்ந்த தேன்பால்
ஒப்புறச் சேர்ந்திளம் பாகுடன் கூடு முருசியைப்போல்
அப்பணி சோண கிரியமர் நாயக னக்கரப்பா
செப்பினன் பின்னோன் றிகழ்முரு கேசன் சிறப்புறவே.

---

இந்நூலாசிரியரிட தம்பி, குடி. தா. தாழையேத்தம் கிராம

கர்னம் A. S. ஜெயராம் பிள்ளை அவர்களால் துதித்த

நேரிசை வெண்பா

முருகேச னென்று முழுப்பெயரைக் கொண்டு
அருகிருந்து காத்தவென் னண்ணல்—அருணகிரி
யக்கரப்பா மாலை யணிந்துபுகழ் பெற்றபெருந்
தக்கோன் றிருத்தாள் சரண்.

---

## அவையடக்கம்

பொன்நிறமாந் திருவருணைக் கிரியிலுறை
ஈசனடி புகழ வாய்ந்த
நன்மனத்தா ரறுபத்து மூன்றடியார்
தொண்டியல்பை நவின்று நாயேன்
மன்னிலத்தி லக்கரப்பா மாலையந்
தாதிதொடை வனைதல் வேட்கை
யுன்னியெழ விரவிநிகர் புலவர்முனம்
மின்மினிபோ லொளிர்வித் தேனல்.



உ

வேலுமயிலுந் துணை.

# குருவணக்கம்.

## வெண்பா.

உருவாகி யோங்கி யொளியாகி நின்று
மருவாகி எங்கும் மலரும் — முருகன்
திருமயிலை யாயிரப்பா செய்சாமி நாத
குருவே அருளைக் கொடு. 1

கூறுமலர் வில்வக் கொழுந்தோடா மாய்ந்தமரஞ்
சாறூர நீர்பூதி தாளாற்றி — யீறுபெறக்
கொண்டுதளிர் பூசித்த கோவே குருநாதா
தொண்டன் மனத்தனருள் தோற்று. 2

தோற்றிகலார் கோல்ஞேக்கித் தூக்கியகை தூக்கியவார்
மாற்றுறவே செய்த மனநிலையார் — ஏற்றிரவி
பஞ்சமுறுங் காலத்திற் பாடிமழை பெய்வித்த
விஞ்சைகுரு பாதம் விதி 3

விதியார்ந்து வேடர் விறட்டிடகா னத்தில்
கதியார்ந்து கண் தெரியாக் கள்ளர் — மதியாகக்
கண்ணொளியார் எந்தைகுரு காட்டிநிலை தந்தருளத்
தண்ணொளியார் தாளுளத்தே தாங்கு. 4

பதித்தில்லாள் நோய்போக்கிப் பாசகமன் தோர்க்கத்
துதித்துயரப் பாவாரச் சூட்டி — மதித்தாய்ந்து
தண்ணருள் செய் சற்குருவாஞ் சாமிநா தன்கிருபை
கண்ணினிய பொற் கமலங் காப்பு. 5

உ

சிவமயம்

# ஸ்ரீ அருணகிரிநாதர்

# அக்ஷரப்பாமாலை

விநாயகர் துதி.

வெண்பா.

பூவார்பொன் வானுலகோர் போற்றுந் திருவருணைத்
தேவார்சோ ணேசன் திருவடிசீர்—நாவார
அக்கரமா மாலைசொலற் காரரணு மக்கரங்கட்
சுக்கரமா வண்ண னருள்.

நூல்

அருளே திருவருணை அண்ணலுரு வாரும்
பொருளே யவன் கருணை பொற்பு—இருளே
கடியவெழு சோதிநினைக் காண்டற்குக் காட்டும்
படியுடையார் யார்பதிவே ருர். 1

ஆராரு தாரநிலை ஆளும் பரசிவனார்
தேரூரும் வீதிமிகு சீருருணை—போரரும்
நீர்மதியார் வேணி நிமலனருள் யாவென்பார்க்
கேர்கதிதா னென்றல் இறை. 2

இறைவா திருவருணை ஏகாக் கரனே
உறைவா யடியாகம் உற்று—நிறைவாயே
இப்போது நாயேன் இதயத்துள் நீங்காது
எப்போதும் போற்ற நிலை ஈ. 3

ஈடேற்றல் தொண்ட ரிகல்பாசம் நீக்கலருள்
வீடேற்ற லன்றேயாம் வேண்டுவது—நாடேற்றும்
அண்ணு மலையாயப் பம்புலிமா செஞ்சடையா
யுண்ணு முலையா யுகந்து. 4

உகந்து மனமார வோதுமடி யார்க்கு
மகமாயை நீக் கருணை வள்ளல்—தகவமரும்
தெள்ளு தமிழ்ப் பாமாலைத் தேன் சொரியும் வாய்ப்புலவர்
உள்ளுறையு மானந்த வூற்று 5

ஊற்றுப் பெருக்கி னுயிரோம் பருணகிரி
போற்றிப் பணியவருள் பூத்தமலர்—தூற்றிடக்கை
தந்தருளிச் சொற்றிடச்சீர் தாலருளி நெஞ்சருளி
எந்தையயே நின்று யெனக்கு. 6

எனக்கேநின் பொற்கமல மீவாய்சோ ணேசா
உனக்கேயா னுற்ற உடைமை—மனக்கே தம்
கொண்டே னடிசார்வான் கோவேநீ போக்கியருள்
எண்டிகையா வந்த நிலை யே. 7

ஏயமலர் கொண்டமரர்க் கீசனடி எந்நாளும்
தூயசீர் சொல்லித் துதி மனமே—மாயநெறி
வேண்டா மணிவேண்டி வீழருவிச் சோணகிரி
ஆண்டா னமர்வான் அவை. 8

ஐய வனையுதரத் தாரோடு நான்குமதி
யைபயி லுழன்று பரிதவித்தேன்—பொய்யன்றே
மெய்யா வருணகிரி விமலா பவவிருளுக்
குய்யும் நெறிநின் ஒளி. 9

ஒளியே யுலகருளும் வோங்கருணை மேவும்
அளியே நிறைந்த அருளே—எளியேநின்
பொற்கமலங் காண்பான் புகு தமிழ்ப்பா மாலை புனை
வுற்றேன் உறுநெறியன் றே. 10

ஓதப் பிணியறுக்கும் உண்ணத் துயர்வறுமை
பாதகங்களெல்லாம் பறக்குமே வேதனரி
தேடு மடிமுடியார் செல்வர் திருவருணை
ஆடரவர் தா ளௌடதம் 11

ஔவை திரு வள்ளுவரென் றுன புலவர் சொலுஞ்
செவ்வையுரை கொண்டுபதஞ் சேர்வித்தான் இவ்வகையால்
கோணிய சொல் நெஞ்சே குறிக்கொள்க சோணகிரி
காணவரு மேன்மைக் கதி 12

கதிதந்தாட் கொள்ளக் கடிமணத்தில் நம்பி
மதிபதியென் றுவணத்தால் வந்து—விதிதந்து
எக்கணமும் பாடு தமிழ் ஏன்று கொள்ளுஞ் சோணகிரி
நக்கன் பொற் றுளிங் ஙனம். 13

நப்போல் வளையருணை நாதனன்பர் கூட்டத்தில்
ஒப்பவுற இங்கென்னை யூக்கினாய்—எப்போதும்
நீங்காப் பெருங்கருணை நித்தா நிமிர்துயரந்
தாங்கா தடைந்தேன் சரண். 14

சரணச் சிலம்போசை தன்செவியிற் கேளார்
பரவவா ராமை படர்ந்து—பெருமான்றன்
வல்வாளை ஓச்ச மலர்சிலம்பி னோசைசெயல்
நல்வான்சோ ணேசன் ஞயம். 15

ஞயமா ரரசு நலம்பூண்ட கூற்று
நயனார் முடி வணங்கி நண்ண—வயமாகிப்
பூசனைகொண் டாண்டருள் செய் பூரணன்சோ ணேசகிரி
ஈசனருட் கெல்லா மிடம். 16

இடமா றெறிபத்தர் யானையிடர் செய்யக்
கடமா ரதன்கையைக் காய—உடல்சோழன்
தன்னைக் கொலவேண்டத் தற்கொலைகண் டுற்றருளார்
என்னருணை யீசன் இணக்கு. 17

இணக்குறவே என்முடிமேல் யீசனடி மேவி
பிணக்கிறையும் இன்றியுறப் பெட்டுப்—பிணைக்கும்
தொடைமாலைத் தொண்டர் துதியேசோ ணேசர்
தடையிலருட் போகந் தரும். 18

தருமா புகழ்சோழர் தாக்கமரிற் பட்ட
ஒருதலையில் வேணியுற வுற்றுக்—கருவூரில்
அத்தலைக்கை யேந்தி யழலேபுக் காரவர்சீர்
நத்தலமாஞ் சோணேசா நன்று. 19

நன்று நரசிங்க முனையரைய நாயனார்
நின்றபொரு ளீசனணி நீறெனக்கொண்—டன்றும்
ஆதிரை நாடோறு மடியார்க் களித்துற்ற
பாதமருள் சோணகிரி பற்று 20

பற்றிவலை வீசுமதி பக்த ரனுதினமும்
உற்றமுதல் மீனுனதென் றெண்ணி—எற்றுகடல்
தன்னிலிடு வாரொருநாள் தங்கமீ னைத்துறந்தார்
மன்னருணை யீசன்றாள் மன். 21

மன்னுள் கலிக்கம்ப மாவடியார் தன்மனையார்
துன்னுமன்பர் தொல்லடிமை யென்று சொல—முன்னின்று
பூசுநீர் தாங்குமவர் பூங்கைவீழ்த் தாசருணை
ஈசனடி யார்க்கிஃ தியல். 22

இயற்பகையின் நெஞ்சத் தியல்காணில் லானைச்
செயற்கைமறைத் தூர்த்தனாய்ச் சென்று—முயக்குரிய
பெண்ணாய்க்கொண் டேற்ற பெருமான் திருவருணை
அண்ணல் பரமன் அரன். 23

அரனருள்ஞா னப்பாலுண் டார்ந்தசம் பந்த
வரபதிகந் தோறு மகிழ்ந்து—பாவறுசீர்
அண்ணா மலையாய் அடியேன் பிறப்பறுக்க
எண்ணா மிதுகா ணிலக்கு. 24

இலக்கணநூற் கல்லேன் எழுத்தறியேன் பொல்லேன்
துலக்கச்சொல் நில்லேனால் தூய—குலக்குணத்தில்
புல்லேனா னுன்னடியைப் போற்றுதலே சோணகிரி
வல்லானே வேண்டும் வரம். 25

வரம் பெறுமாண் செக்கரிறை வான்கலியார் மன்றும்
அரன்கோயிற் றீபத்தொண் டாற்றல்—இரவொருநாள்
தைலமிலா மைக்குத் தலைதாக்க ஆட்கொள்ளல்
ஐயர்சோ ணேசற் கழகு. 26

அழகாரு ளையடிகள் அர்பவத்தை யாக்கும்
பழவினையைப் பாற்றப் பரிந்து—வழிமகற்கு
மன்னுமுடி சூட்டி மனநெகிழ்ந்தார் சோணேசா
என்னையடி சேர்த்தற் கிளக்கு 27

இளசைப் பதிமாறர்எலுநெறி காண்பார்
முளைசெய்நெற் கொண்டமுத மூன்னி—வளையிருளில்
சென்றார்க்கு மெய்காட்டிச் செம்மைசெயல் நாயேனை
அன்றாள்சோ ணேசற் கறம். 28

அறம்புரிசெங் கட்சோழ னார்தவங்கண் டின்பத்
திறம்புரியு மானைக்காற் சென்று—உறமிருஞ்
செங்கோயில் கொண்டாற்குச் சீர்கோயிற் சோணகிரி
அங்கோயி லின்னா னனம். 29

அனநடையாள் பங்க னருணேச னன்பர்
கனமுதவ நெற்றிருடக் கண்டு—இனுமுளவென்
எல்லா மளித்தார் இடங்கழியார் இஃதன்றே
கல்லாரும் வில்லான் கருத்து. 30

கருத்தான் கழன்ற கழல்சிங்கன் ஈசற்
குருத்தா ளுறுமலர்கொண் டுய்ப்ப—மருத்தான்பூ
காண நுகர்ந்தாள் கரமறுத்தான் சோணகிரி
காணவினைப் பாசமறுங்காண். 31

காணக்கண் காளத்தி கண்ணப்ப னூன்கறியூண்
பூணத்தான் கொண்டவூன்கண் போத்தக்கால்—காணகுறி
நாட்டுமடி யார்க்கிந்த நற்பதத்தை சோணேசா
கேட்டுவலம் வந்தேன் கிரி. 32

கிரிதரன் கீர்த்தி கிழமையொடு பாடும்
விரிபுகழின் சுந்தரனூர் வேண்டிப்—பரிந்துவிரல்
மிண்டர் செயலுலகில் மேவுவித்தார் சோணேசா
கெண்டையந்தாள் மேவுதமிலென் கீர். 33

கீர்த்திவகை கீதமொடு கிண்கிணியி னுதமிக
ஆர்த்துமறை யோலமிடு அண்ணலார்க்—கார்த்திகையில்
ஏற்றிவிளக் கேத்துவோர்க் கெந்நாளுஞ் சோணகிரி
கூற்றை யுதைக்குங் குரு. 34

குருவாய் திருவருளைக் கொண்டவமர் நீதி
உருவார்ந்த தொண்டுரிமை யோர்வான்—தருதனது
கோவணத்தைப் போக்கியவர் கொண்டபொருள் தூக்கி
கோவணத்தான் சோணேசன் கூறு. [லருட் 35

கூறுமருள் தற்பரனைக் குற்றமுறப் பேசுவர்நா
வேறுபடத் துண்டிக்கும் வீரமிகு—நீறிற்
பரிவார்ந்த சத்தி பரிசேன்ற சோண
கிரிநினைவால் பெற்றேன் கெலிப்பு. 36

கெலிப்புறவே நின்னடியார் கேட்டபெரு ளீவார்
சலிப்பறவே சஞ்சிதங்கள் சாரார்—கலிப்பார் 37
கழற்காரி யார்க்கருளுங் காவலன்சோ ணேசன்
கிழமைபெற நெஞ்சவன்சீர் கேள்

கேள்மெய்ப் பொருளார்முன் கிழ்மூத்த நாதனென்பான்
வாள்ஞான நாலென்று வஞ்சத்தால்—கோளிசைப்ப
தத்தன்சே திப்பான் சமைந்தமைந்தான் சோணகிரிக்
கத்தனன்பர்க் கிதுசெய் கை. 38

கையிற் பதிகொடுக்கும் மாங்கனியைக் காரைக்கால்
தையல்தொண் டார்க்கமுதாய் தந்தபின்—ஐயன்முன்
உண்டகனி கேட்கவஞ்சி யுன்னருளைப் போற்றியது
கொண்டருள்சோ ணேசா கொடு. 39

கொடுத்தார் மிழலைக் குறும்பர்தொண் டன்பால்
அடுத்தவன் றொண்ட ரடிசார்ந்—தெடுத்தார்
உரையார்ந்தெள் சித்திமிகு யோகநிலை நல்கல்
குறைகழல்சோ ணேசனது கோள் 40

கோளிலியான் எங்கள் குருபரன்சீ ராதநலம்
நாளும் பெருகும் நயமுண்டாம்—நீளமுறு
பேரும் பெருவாழ்வும் பீடும் பிறங்கருணை
ஆரூமிவன் பேர்கூறுங் கௌவை. 41

கௌவை யெழவெனது காதலே யாயிற்றால்
மௌவன் மணக்கும் மதுமலரால்—எவ்வாயும்
இண்டைபுனைந் தேத்து மியலடியோர் சூழருணை
தண்டெரிய வாய்நின் சரம். 42

சரணஞ் பதிஞானம் தருஞானம் நாயேன்
நரண பவனுமம் ஞானம் —முரணி
வருஞான மஞ்ஞான மாமருணை நாதன்
தருஞானந் தாள் மனமே சாற்று 43

சாற்றுங் கணம்புல்லர் சந்ததமுந் தீபத்தொண்
டாற்றிடவோர் நாட்டைலம் அற்றதென—மாற்றம்புல்
மூட்டித்தீ முட்ட முடிசிகைகொண் டார்க்கருளே
நீட்டுஞ்சோ ணேசன் சிவம். 44

சிவனருளால் நின்றருளுஞ் சீர்நெடுமா றன்பால்
தவநிலையார் ஞானசம் பந்தர்—நவமாய்
மொழிக்குமொழிச் சைவமணம் மொய்ப்பவரு ணேசா
செழிக்குநெறி செய்தாய்நின் சீர். 45

சீரகமார் கோவில் சிவானந்த மஞ்சனமாம்
வர்ஞான தீபவொளி இன்னமுதாய்—நேரன்பு
ஓது திரு வாயலடிக் குற்றருள்செய் சோணகிரி
சோதிநிலை பொற்றுள் சுகம். 46

சுகமார் முனையடுவார் தொன்மை நெறிநாளும்
பகைவரையே வென்றுபொருள் பற்றித்—தகவாரச்
சிந்தைபரி வோடுஞ் சிவனடியார்க் கீந்தபதஞ்
சொந்தமெனச் சோணேசா சூழ். 47

சூழுஞ் செருத்துணையார் தூயமனப் பூத்தொண்டில்
வாழ்பல் லவர்கோன் மகிழ்தேவி—காழாரும்
நன்மலர்கள் மோந்ததனல் நாசிய றுக் குன்நெறியை
சின்மயன்சோ ணுசலன் தாள் செப்பு. 48

செப்பும் புகழ்த்துணையார் செய்பூசை யாற்றின்கண்
மெய்ப்பசியால் நீர்குடமேல் வீழ்ந்தக்கண் டப்பசிக்கே
பஞ்சமுற்றும் பொற்காசு பாவித்தங் காண்டருள்செய்
செஞ்சரண்சோ ணேசனையே சேர். 49

சேருந் திருநீல கண்டயாழ்ப் பாணரன்பு
கூருந்தே வாரம்யாழ் கொண்டுசொலச் – சீரருளும்
தொண்டரகந் தேர்றுலவுஞ் சோணகிரி நாதனே
தண்ணருளார் சைதன் னியன். 50

சைதன்யப் பேரொளியே சத்துசித் தானந்தச்
சைதன்யம் தந்து தமியேனும்—உய்யவருள்
தெற்கருணைக் கற்பகமே சிற்பரனே தற்பரனே
சொற்பதங்கள் பாவில் சொரி. 51

சொரியுந் திருவருணை தோன்றுல்நின் தீபம்
எரிய இருளறுமே எங்கும் —கிரிவலமாய்
சுற்றுமடி யார்க்கென் றுந் தோன் றுஞ் சுகானந்த
சுத்தசுடர் சோதி நிலை 52

சோதிநிலை வாசகமே சொல்வாத வூரர்தாம்
ஓதவெழு தாமறையின் உட்கிடையே — யீதெனவே
தீட்டிக்கைச் சாத்தினன் தேவனெங்கள் தென்னருணைத் 53
தாட்டிகன் சௌரியன் சம்பு

சௌரியன் சம்பு சதாசிவன் பேய்கள்
பௌரிகொள நின்றாடும் பாதன் —கவுரி
துணைவன் அருணேசன் சொல்லுகமைத் தன்னற்
றினையிலுறு விக்குஞயஞ் செய். 54

ஞயஞ்செய் புகலிவரு ஞானக்கன் றின்ப
மயஞ்செய் தமிழே மணக்கு —மியல்மணத்தில்
உற்றா ருயர்ந்தார் உயர்சிவமாய் சோணகிரி
நற்கா தரியாத ஞான்று. 55

ஞான்றிழிந்தேன் சோணகிரி நாதனடி யார்க்கன்ன
மேன்றுதிருத் தொண்டரின்ப மெய்திலவஞ்—ஞான்றுசிவன்
சித்தமுறச் சேய்கறியூண் செய்யெனவே செய்தவர்தாள்
நித்தநிலே நெஞ்சே ஞிமிர்ந்து 56

ஞிமிர்தேன் செருக்கு நினையா தருணை
யமிர்தே அருளின்ப வாழி தமிழ்செய்யும்
வல்லார் வணங்கும் வழியறிந்தவ் வழியே
நில்லார் வசத்தன்பு ஞீண்டு 57

ஞீண்டுமலே வில்லித்தாள் நீங்கா நிலைமைபெற
தூண்டுபெரி யார்வணங்கு சோணகிரி—சேண்டவழுங்
கோலமதி வானமதி கோளரவு கொள்பரன்பைஞ்
ஞீலியரன் பாலுள் ஞெகிழ்ந்து. 58

ஞெகிழ்ந்தலார் முக்கண் நிமலனருள் பொற்றாள்
மகிழுறவே நேசரடி வாழ்த்த—திகழும்
குரைகழலார் சோணேசா கூற்றுதிரை மாற்றி
நரைமூப்பெல் லாமெனக்கு ஞை. 59

ஞைப்பிறவி தான்வேண்டேன் நாதனரு ணேசன்றாள்
வைப்புறவென் நெஞ்சம் மகிழ்வுறுமால்— பைப்பிறவி
வாரா வமைமுன்னூர் வஞ்சகம ஞர்பாசம்
சாராமை செய்தாய் தகை 60

தகையார்ந்த அப்பரடி தாள்பணிந்தப் பூதி
வகையார்ந்து தொண்டமுது வாய்க்க—மகனரவால்
அற்றவுயிர் பெற்றடியார்க் காய்ந்தன்புற் றூர்க்கருள்செய்
தற்பரன்சோ ணேசன்றாள் சார் 61

தாள்சார்ந்து நீலனக்கன் தன்மனையா ளோடுசிவன்
வேள்விலிங்க மேற்சிலந்தி மேவவே—கோள்கண்டு
தீர்த்திடவாய் நீர்துமிக்கத் தேவிசெயல் நீக்கவடி
சேர்த்தல்சோ ணேசன் திரு. 62

திருவாரும் வேட்கோவர் தேவிதனைத் தீண்டத்
திருநீல கண்டமெனத் தீண்டா—திருந்தவரை
ஓடுதந் தோடுவித்த வும்ப ரருணேசர்
தேடுதிரு கார்த்திகை நாட் டீ. 63

தீபங்கண் டாருந் திருத்தொண்டுடையார்க்கு
பாபம் பிணிவறுமை பண்டைவினை—சாபமவை
நீக்கி நமன்பாசம் நீறுபடுஞ் சோணகிரி
சூக்குமத்தாள் எத்தித் துதி. 64

துதிக்க துதிபெருகுஞ் சோணேசன் கீர்த்தி
மதிக்கப் பொருள்கொடுக்குமாண்பு—கதிக்கும்
சடையார் விடையேறுஞ் சங்கரனார் கொன்றைத்
தொடையார்தாள் சேர்மலரே தூய் 65

தூயமனத் தேயர்கோன் சூலைநோய் தீர்க்கமறை
நாயகனார் சுந்தரனை நாடவருள் நேயமுற
வண்றொண்டர் வன்மையென வாள்கொடுதற் கொன்றாரே
தென்னருணை யீசா தெளிந்து. 66

தெளிவாய் நமி நந்தி செய்தொண்டி லாரூர்
ஒளிவாருந் தீப முயர்ந்தோங்க—எளியார்நெய்
ஈயாமைக் கண்டுநீர் இட்டெரித்தார் சோணேசா
தீயளித்த தந்நீரே தேர். 67

தேர்ந்தேசோ ணேசா திருமூல தேவருள்
கூர்ந்திறந்த கோக்காவல் கொண்டான்றன் போர்ந்தவுடல்
தன்னுள்புக் கத்தொழிலைத் தான்செய்தார் மன்னுயிர்கள்
தன்னுயிரா மென்ப தை. 68

தைக்கத்தாள் றாற்கா தூர் சாரமனை வூசிக்கோர்
சிக்கில்லா கைப்பிடிக்கச் சிந்தைநிலை வைக்கயெழில்
பாவும் அருணகிரி பாமிலாத்துப் பாமாலை
தூவுமலர் கெண்டைக்கால் தொண்டு. 69

தொண்டுபுரி கோட்புலியார் சுத்தசிவ னுக்கென்று
கொண்டுகுவி நெல்லெல்லாம் கொண்டுதமர் — உண்டதினல்
கானவாள் சேயுடனே கண்டித்து அன்பார்ந்தார்
சோணகிரி நாதன்ருள் தோய்ந்து. 70

தோயலுறுந் தீர்த்தத்திற் ருரெடுக்கத் தண்டியார்
நேயவிழி யில்லா நிலைகண்டு — வாயகத்தால்
கண்ணுறுமோ வென்றசம ணுரைக்கச் சோணேசன்
கண்தரதெள வுற்ருரே கண்டு. 71

தெளவும் பரசமயச் சங்கமங்கைச் சாக்கியனர்
செவ்வையாம் பூஜை செயல்மறந்தூண்—கவ்வுமுனஞ்
சித்தமுற வோடிச்செங் கல்லெறியச் சோணகிரி
நத்திபதங் கொள்தாள் நமக்கு. 72

நமவோம் சிவயவென நாடோறும் நெஞ்சே
சமயமறிந் தெம்மானைச் சார்ந்து—எமனை
மறுத்தென்னை யாள்வாய் மலையருணை நாதா
நறுமலர்த்தா ராகவன்று நாடு. 73

நாடு மருணேசன் நடுநிலையார் பொருளே
சூடு மனமலராற் ருயபதத்—தாடரவங்
காதாரத் தில்லை கனகசபை நிர்த்தனமார்
நீதன்ருளோசை நிறை. 74

நிறைவா யருணகிரி நின்செயலே யெல்லாம்
வுறைவாயென் னுள்ளுநின்ரு ளுன்றி பறைவாயாய்
நாக்கடிப் பாச நவின்றவிப்பா குற்றமற
நீக்கியடி மேவவருள் நீ. 75

நீதிமனு கண்டன்சேய் நின்ருர்தேர்க் காற்கிடையில்
கோதிலாவ் கன்றதனை கொன்றவழி—ஒதமன்சேய்
மீபுரமேற் றேரேற்ற மீட்டாண்ட சோணகிரி
நூபுரத்தாள் கொண்டே நுதி. 76

நுதிபெருகும் நுண்ணறிவார் மூர்க்கரடி சூதால்
பதியமுது ஆற்றும் பணியே—மதியார்ந்து
தோற்கலன்னுர் தாக்கிவருஞ்சொத்தைத்தொண்டார்க்கருள
நோக்குமடி சோணேசன் நூல். 77

நூற்ருள் பொருந்தத்தை நூபுரத்தா ளோசை மிக
ஏற்றுசெவி காணவிழி ஏழையுரை—ஆற்ற
நலமருளண் ணுமலையார் நாதனருள் நீங்கா
நிலவணிபொற் பாதமலர் நெஞ்சு 78

நெஞ்சாரக் கஞ்சமலர் நின்ருள்பஞ் சாக் கரத்தால்
பஞ்சை நூல் பாவாக்கிப் பாதமுற—நஞ்சார்ந்தச்
சோணேசன் ருளில் தொழுதுறைய வேண்டிலங்கு
நீணேச மூறவருள் நேர். 79

நேருஞ் சிறப்புலியார் நேசர் சிவநேசம்
நேரும் பெரியார்க்கு நேருவது—தேரில்ருள்
உண்டி முதல் மூன்றென் றுதவினுர் சோணேசா
நண்ணு மியன்மனந்தான் நைந்து. 80

நைந்துபா சம்மறவே நாதனடி சாரநிலை
ஐந்தெழுத்தை யோத அருள் தருவர்—சந்ததமுந்
தாவியருட் சோணேசன் தன்னடியா ரெய்தும்
நோயிலையாய் செய்வான் நொடித்து. 81

நொடிக்குமருள் சோமாசி மாறனடி நூலார்
அடிக்கடியார் தொண்டு பணிவாற்றி—படிக்குமுறை
தாக்குமடி சுந்தரனுர் தாளேற்ற ஆண்டருள் செய்
நோக்குமரு ணேசன்ருள் நோன்பு 82

நோன்பார்து பத்தொண்டு நூலாரக் குங்கலியர்
மானு ரமுதுபெற மாங்கலியந்—தாந்தரவே
பின்னு மவர்கலவை பெற்றுற்றச் சோணேசன்
பன்னகத்தார் பொற்ருள் பதி 83

பதியருள்சோ ணேசன் பரிதிமதி சேய்மால்
விதிகவிநீ லன்விடாரா குக்கே—ததிபதியார்
சாதகமார் தோற்றநிலை சாறுவன நீக்கிமலர்ப்
பாதமது பற்றிடக் கண்பார் 84

பார்பாவார் நூலார பஞ்சாக் கரபரமன்
சீர்நாவார் செஞ்சரணச் சேவையுற—சேவேற
திங்களணி சூடுந் திருவருணை எந்தைகுரு
பிங்கலனுர் பாதம் பிணை. 85

பிணைவிழியார் மாதர் பிணிவலையிற் பின்னி
அணைந்தலையா நாயேன் அழியா— திணைமலரார்
எம்மா னுமையா ளிடப்பாகன் தென்னருணைப்
பெம்மா னருணல்கும் பீடு. 86

பீடுபெறு நின்னடியார் பேரின்ப சாகரத்தில்
ஈடுபெற மூழ்கி இருந்தார— வீடு
இகபரமா ரிப்பிறவி யிண்டலறச் செய்வான்
புகலேர்சோ ணேசன் புகழ். 87

புகழாருஞ் சோணகிரி பொற்கமல பாதம்
அகமூழ்ந்து இன்பநிலை ஆக்கும்— மகமாயை
சித்தத் தகன்றுசிவ யோகநிலை சித்தியொடு
புத்திதரும் நெஞ்சகமே பூத்து. 88

பூவிற் புகழ் மானக் கஞ்சாறு புத்திரியை
சேவிக்கச் செய்ய திருமணத்தில்— மாவிரனும்
பஞ்சவடி வென்னமுடி பற்றியறுத் தீந்தவர்பால்
பிஞ்சகன்சோ ணேசன்ருள் பெட்டு. 89

பெட்டரிவாட் டாயதிரு பெம்மான்நெற் கீரைமா
சட்சுவைகை வேதனத்தைத் தாக்கிவர— வட்டிற்கீழ்
தத்திவிழத் தன்கையைச் சேதிக்கத் தண்ணருள்செய்
பித்தன்சோ ணேசன்சீர் பேசு. 90

பேசுமழ நாட்டு பெருமான்பே ரன்பினுல்
ஈசுரன்போற் கொன்றை இலங்குதல்கண்— டாசித்தைந்
தக்கரத்தை வேய்குழலில் ஆற்றினர் மாதுமையோர்
பக்கன்சோ ணேசன்ருள் பைத்து. 91

பையரவார் சோணகிரி பாலிக்கும் வல்லாளன்
மெய்மகபேற் றுக்கிகை மேவுகொடி— செய்யவரன்
ஆண்டியாய்ப் பெண்விரும்பி ஆருமின்று யில்லனுப்ப
பூண்டருள் செய்நின்ருள் பொருள். 92

பொருட்கலவைத் தொண்டு புரிமூர்த்தி யார்தாம்
அருட்கா ணமன்வேந் தறிந்து— மருவகிலே
சாந்துரைக்கக் காணுது தன்கையே கொண்டரைத்தார்
பூந்திருத்தாள் சோணகிரி போற்று. 93

போற்றுசி ரேனுதி புண்ணியர்வாள் கற்பிக்க
எற்ெருருவன் வென்றிபெற வெண்ணியுயர்—நீர்நைத்
தரித்து மறைத்தரிவாள் தாக்கச்சோ ணேசன்
சிரித்தருளார் தாள்பௌ திகன். 94

பௌதிகனர் தொண்டு பணிமுருக பத்தர்
தௌதிகமே பற்றிநறுந் தாமத்தைச்—சௌரியமார்
தேனுரச் சாற்றவருள் செஞ்சோதி சோணகிரி
மானுர்பொற் றுளே மலர் 95

மலரடியார் தொண்டர் பசுபதியார் வாசம்
சலமடிகண் டம்வரையிற் சார்ந்து—புலநொடுங்க
அஞ்செழுத்தை ஓதிடவந் தாட்கொண்ட சோணகிரி
வஞ்ச செஞ்சொற் கஞ்சமுறுர் மாண்பு 96

மாண்புமிகு மாதனூர் மாநாளைப் போவார்தாம்
பூண்டருளுநந் தொண்டுநிலை பூரித்து—மீண்டவரை
தீக்கைசெய்து வாழ்வித்தாற் தேறுமறை யோதுமருள்
மேக்கருணை சன்றுள் மிளிர். 97

மிளிரீச ரன்பருடை வெள்ளைவைப்ப வென்ற
அளிகுறிப்புத் தொண்டர்சொல் லாஞ்சி—சுளித்துள்ளம்
தண்டா வுயிர்நீக்கத் தாழ்வாரா தாங்கருணை
விண்டாங் கரன்புகழ்மீக் கூறு. 98

மீக்கூறு கோக்களைச்சண் டேச்சுரனுர் மேய்த்துப்பால்
தாக்குபணி மண்ணிலிங்கத் தாள்சொரிய—தீக்கோவர்
தத்தியடி வெட்டவன்று தானெடுங்கோ லாகிமழு
முத்தியருள் சோணகிரி முந்து. 99

முந்திமுருகேசன் மூலமொழி யாரசெவி
சொந்தமுற வேகொண்ட சோணேசா—வந்தனது
கீர்த்தியடி யார்க்கருள்செய் யுங்கிருபை நாயேற்கும்
மூர்த்தியருள் முத்தித்தீ மூட்டு. 100

மூளுமருட் சோதி மொழிமுதலார் வானவர்க்கந்
நாளமிர்தந் தந்துநிலை நாட்டியவர்—ஆளும்
அடலார் திருவருணை ஐயன்முன் உண்ட
விடனுர்கண் டன்புகழே மெய். 101

மெய்யார் திருவருணை மேலோய் விரிகைமலத்
துய்யமலர்த் தாளாரச் சொற்பதமே—பெய்யுமடி
வாணிகலை பாணிகலை வாய்த்தருளு மன்னுமுடி
வேணிகலை யான் பொற்றாள் மேரு. 102

மேருவரி வில்லாய் விளைவித்தோய் மேதையகத்
தாருச்ச மாட்சியுறத் தந்தபலன்—தேரும்
புகல்கவிநீ சம்போகி போற்றவருள் செய்தான்
மகனரு ணேசன்ற ருண்மை 103

மைவலியா ராட்சிரவி மைந்தனீ ராருற்ற
தைமதியார் கோதகற்றி தாள்பரமன்—வைகதியே
காக்கச்சே யாட்சிகலை நீசம்போய்க் கேதார
மோக்கமரு ணேசன் மொழி. 104

மொழியார்பொன் நீசம்போய் முக்கோண கேந்த்ர
வழியார மெய்நோக்க வந்தார்—நிழல்சார
பத்திசெய்சோணேசன் பரம்பொருளன் பார்க்கெல்லாம்
முத்தியருள் வானிதுகேண் மோ. 105

மோனைத் திருவருணை முத்தி முதலானை
மானைக்கை யேந்து மகத்தானை—யானை
யுரியானை வேத முணர்வானை யாரும்
அரியானை யன்றியிறை யார். 106

யாவருமே போற்று மருணகிரி நாதன்சீர்
பாவருளே சந்தம் பதித்தருளார்—மாவருணை
அண்ணலடி யக்கரப்பா வாரம் புனைபொருளே
உண்மைவரை நின்றுள் யுகம். 107

யுகங்காணு யோக சிவசார நூலார்
அகங்கா ணிலப்பாடி ஐயன்—இகபானுர்
நாராயணப் பிர்ம்ம நாதனையாட் கொண்டருளார்
வோராக்கர னருணை யோது. 108

யோகநிலை பூசலடி யார்மனத்துட் கோயிலமை
டேகமுறச் சிந்தையில்முன் யேகியருள்—ஏகபரன்
காப்பார் சோணேசர் கலந்திவார் உள்ளூறி
ராப்பகலில் லாத்தாள் ரசம் 109

இரசமுற ஞான இரவிமதி யாக்னி
சரசமுற வொத்துத் தனியார்—பரசமயத்
தாயுமா னன தகையார்போல் சோணகிரி
நாயேற்குன் றுளி லக்கே நாட்டு 110

இலக்குறவே பட்டிணத்தார் இல்லேகி தாட்கு
வலிக்கக்கா தற்றவடி வூசி—நலிப்புறுங்கால்
வாரா வழிக்கென்று வந்தருள்செய் சோணகிரி
ஏரார் வரமெனக்கே இங்கு 111

வரமார் குருநமச்சி வாயரடித் தொண்டர்
அரனு ரண்ணுமலை வெண் பாவால்—உரனுர்
குகைநமச்சி வாய ருரைகொண்டா ரென்நெஞ்சே
வகையருள்சோ ணேசனை நீ வாழ்த்து 112

வாழ்வாரூர் நம்பிதனை மைந்தனெனப் பெற்றதிருக்
காழார் சடையாரடி கன்னிமதி—தாழா
இசைஞானி யார்க்கருளும் எந்தைசோ ணேசன்
மிசையடி போற்பாதம் விதி 113

விதிநேம விண்ணொளியார் மெய்ப்பரம வள்ளல்
மதிராம லிங்கன் வடலூர்—துதியருட்பாத்
தொண்டுரையக் கொண்டறையுட் சோதிதருஞ் சோணகிரி
விண்டருள்நீ ஞானநிலை வீடு 114

வீடு நமக்குண்டு மெய்ப்பரம வேதாந்தக்
கூடு நமக்குண்டு கூறுவநன்—காடேறேன்
தூயமதி மாமுடியார் சோதியொளிர் சோணகிரி
நாயகன்வாழ் ஞானவெளி நாடு. 115

வெளிபதியா ருஞ்சி விதிசாமி நாதன்
ஒளிமயிலை அபிரப்பா வோத—நளிர்பாசத்
தொல்வினை தீர்த் தெம்பெருமான் சோணேசன் அன்பருள்
வில்வமணி வேணியனை வேண்டு 116

வேணி யருணகிரி விண்ணொளியார் வீடேற
எணி நமக்குரிமை இன்புவரி—தோணியுடல்
பஞ்சபூ தப்பலகை பாய்மரவோங் காரவழி
மஞ்சனத்தாள் நெஞ்சகமே வை 117

வைப்பாரெந் நாளும் மதியிரவி வானளவுந்
தைப்பார்தன் றுளாறு தாரத்தைக்—கைப்பிடிசீர்
உண்ணா முலையமர்வார் உச்சிவெளி சோணகிரி
அண்ணா மலையா ரருள் 118

முற்றிற்று.



கட்டளைக்கலித்துறை

அருள்முடிகாணா தரியயன்தேடும் அருணகிரி
அருள்வடிவான அறுபத்துமூவர் அடிநெறியார்
அருள்படிந்தோதிய வட்சரப்பாமாலை ஆய்ந்தணிந்தே
அருள்நடந்தாயடி யார்க்கடியாயெனை யாண்டருளே.

(திருச்சிற்றம்பலம்.)

உ

சிவமயம்

## ஸ்ரீ அருணாசலேசுரர் உயிர்வருக்கம் படைத்தற்

# பாமாலை

அறுசீர்க்கழி நெடிலடி

அறநெறியைச் சாரேனை யமுதிரசம் அருந்தேனை
யாரு தாரத்
திறவுகோ லறியேனைத் திரிகோணந் திறவேனைச்
சிவாய வென்று
துறவுநிலை தோன்றேனைத் துரியாதிச் சுழியார்ந்து
துறவேன் றன்னை
பிறந்திங்கு உழல்வேனைப் படைத்தாயேன் சோணைசப்
பெருமை யோனே 1

ஆரூரிற் பிறவேனை யருணகிரி நினையேனை
அம் பலத்தே
சீரூரக் காணேனைச் சிவகாசிப் பதிநடவாச்
செற்றி லேனை
எரூருந் திருக்கடையூ ரடையேனைப் புவிபாரம்
இருத்தி னேனை
தேரூருந் திருவருணைச் சிற்பரனே படைத்ததேன்கொல்
செகத்திற் றுனே 2

இரப்பவருக் கீயேனை எழுத்தறியா நாயேனை
இசையில் லாத
கரத்தலக முடையேனை ஞானநிலை யறிந்துபதி
காட்சி யார
விரத்திநிலை தோன்றேனை மெய்ப்பதமே யுணராத
வீண னேனை
பரத்தையகம் புகுவேனை படைத்ததேன்கொல் திருவ(ரு)ணைப்
பரம தேவே 3

ஈசனடி வணங்கேனை இன்மொழிகள் விரும்பேனை
இருதயத்தார்
வாசமலர் தூவேனை மனமுறுகிக் கூவேனை
மாயமாட்டாப்
பாசவலை யுடையேனைப் பண்டைவினை கொண்டேனைப்
பக்தி சார்ந்து
பூசனைகள் புரியேனைப் படைத்ததேன்கொல் சோணகிரி
புனிதவேளே 4

உன்னையுணர்ந் தறியேனை யுள்ளொளியைக் காணேனை
யுணர்ந்துள் வோங்காச்
சின்னதன மூடையேனைச் சின்மயமே யடையேனைச்
சிந்தை யார்ந்து
தன்னைத்தா னறியேனைத் தத்துவத்தை யுணரேனைத்
தகவி லேனை
என்னபய னுறுவதற்கே படைத்தீரோ அருணகிரி
யீச னாரே 5

ஊக்கமிலா நாயேனை யொழிவில்லா நெஞ்சேனை
உனது தாளில்
நோக்கமிலா துளத்தானை நண்ணியநூற் கல்லேனை
நோயே வாய்ந்து
சாக்கருதி யுழல்வேனைச் சஞ்சிதபா தியமூன்றும்
தணியா தேனைப்
போக்குவர வுடையேனைப் படைத்ததென்கொல்திருவருணைப்
பொருப்பு ளானே 6

எத்தகவும் இல்லேனை வழக்குரைகள் செய்வேனை
இடர்க ளேசெய்
தெத்தனென வுழல்வேனைத் தொல்வினைக ளுடையேனை
எவற்கு மென்றும்
சுத்தமனத் தொடுமேது கொடுத்தறியாப் பெரும்பாவந்
தொலைந்தி லேனை
இத்தரையி லெதற்காகப் படைத்தீரோ திருவருணை
இறைவ னாரே 7

எடனைக ளுடையேனை ஏற்பவர்சொற் கிரங்கேனை
எழில்சான் றோர்பால்
கூடவகை யறியேனைக் குறிநெறிகள் உணரேனைக்
குழைந்துன் றனை
பாடவகை யறியேனைப் பதப்பொருளைப் பற்றனைப்
பரிந்து போற்று
மூடனையேன் படைத்தீரோ திருவருண கிரியிலுறை
முதல்வ னாரே 8

ஐந்தெழுத்தை நினையேனை அக்கபணி யணியேனை
அன்பு ளோரை
நிந்தனைகள் புரிவேனை நீதிநடு வில்லேனை
நெறியில் லேனைச்
சிந்தைபரி வில்லேனைச் செய்ந்நன்றி மறந்தேனைச்
சீர்மை யில்லாப்
பந்தமறு நாயேனைப் படைத்ததென்கொல் திருவருணைப்
பதியு ளானே 9

ஒப்புயர்வில் லாமுதலார் உயர்ந்தபத மருள்புரியும்
உனையே நெஞ்சி
செப்புகின்ற பிழையனைத்தும் இழைப்பேனைப் படைத்த
இயம்பு வாயே [தென்கொல்
இப்புவிவாழ் வறநினைந்து பணிந்துமகிழ்ந் துறையாமல்
இகத்தே நாலிற்
யப்புவிது பணியணிசெஞ் சடையாய்நல் விடையாய்தென்
னருணை கோவே 10

ஓதுவகை யறியேனை யுற்றவழி நில்லேனை
உமையா ளார்ந்த
பாதியுறு பெருமான்நிற் பணிந்துவெண்ணீ றணியேனைப்
பகைமை யாரத்
தீதுபுரி கொடியேனைத் தொண்டரடி சாரேனைச்
செகத்தா ரோடும்
ஏதுநல மறியேனைப் படைத்ததென்கொல் திருவருணை
இருப்பு ளானே 11

ஔவியமே கொண்டேனை அலைந்துழலுங் குணத்தேனை
அந்தோ அந்தோ
மூவினையு முடையேனை செய்வினைக ளறியாத
மூர்க்கத் தானைச்
செவ்வியநற் குணமேதும் அடையேனைப் பெரியார்பாற்
சேர்ந்தி லேனை
எவ்வகையாற் பயனடையப் படைத்தனைசொல் அருணகிரி
எம்பி ரானே 12

திருச்சிற்றம்பலம்




சிவமயம்

ஸ்ரீ அருணாசலேசுரர் பஞ்சாட்சர

## பஞ்சகம்.

நகாரமுதலோங் காரசுழி நாதாவருக சதுர்வேத
அகாரப்பொருளே பிரிதிவியார் ஐயும்பிரீங் ஸ்ரீரீங் நாற்கோண
மகமேவருக பிர்ம்மாத்ம மதியேசுவாதிட் டானமொளிர்
செகமார்நாதத் தொனியருணைத் தேவேவருக வருகவே.

மகராக்கரனே சரணஞ்சரணம் வட்டரீங்கார மாலேசரணம்
இகராக்கரனே கிலியப்பூவெண் ணிறைவாசரணம் வித்துவத்
பகமார்பணிபூரகத்துறையும் பாதாசரணம் பவமறுக்கும் [தார்
புகழார்சரணங் திருவருணைப் புனிதாசரணஞ் சணரமே.

சிகராபோற்றி தேய்நடுதீ செம்மால் உருத்திர சிவதத்வ
உகரா அருணை முக்கோண உருவேபோற்றி யனுகசுத்தார்
குகனார்தந்தை டீங்கார கோசாபோற்றி சௌமூலஞ்
சுகனார்சாலோ கப்பதியார் தூயாபோற்றி போற்றியே.

வகரவடிவே வாயுநிலை வாசிகண்டத் தறுகோண
எகரநீங்வீங் காரவொளி ஈசுரதத்வ மகேசுரனே
நிகரில்வான விசுத்தியுறை நிதியேதருக சாரூப
அகமாராருணைக் கிரியாசே அவாவுமனைத்துந் தந்தருளே.

யகரமூல வெளிவாழி யாக்ஞைஸ்ரீடீங் ரீங்கார
ஒகரவுடல்மெய் சாமீப வொளியார்ஞான நுதற்பிறைவாழ்
மகரகேது தனையெரித்த மானார்வாழி சதாசிவத்தார்
சிகரம்வாழி திருவருணைத் தேவேவாழி வாழியவே.

திருச்சிற்றம்பலம்.

உ

வேலுமயிலும் துணை.

# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| சிறப்பாயிரம் ௩ | 3 | 15 | நின்சாட் | நின்றாட் |
| நூல் 3 | 20 | 2 | டன்றும் | டன்றுமுதல் |
| 4 | 29 | 2 | உறமிருஞ் | உறசிமிருஞ் |
| 5 | 37 | 1 | பெருளிவார் | பொருளிவார் |
| 8 | 56 | 4 | கெஞ்ஞே | கெஞ்சே |
| ,, | 57 | 1 | செருக்கு | செருக்கி |
| 10 | 70 | 3 | கானவாள் | காணவாள் |

உ

வேலுமயிலுந் துணை

## இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட

# தோத்திரப்பாமாலைகள்.

1. குமரகுரு சுவாமிகள் பஞ்சரத்தினம்.
2. மருதமாநகரம் சுந்திரவிநாயகர்பதிகம்.
3. திருத்தணிகை முருகன் தோத்திரப்பாமாலை
4. திருப்போரூர் முருகன் பாமாலை
5. ஆறுமுக சுவாமிகள் தோத்திரப்பாமாலை
6. திமிரிமாநகர். சோமசுந்தர ஈசுரர் பஞ்சரத்தின [திருப்புகழ்.
7. சோமசுந்தர ஈசுரர் சோடசப் பாமாலை
8. பாகவெளிநகர், கன்னியம்மன் பஞ்சரத்தினம்
9. பாகவெளிநகர் செல்லியம்மன் அஷ்டகம்
10. மருதமாநகர், பொன்னியம்மன் பதிகம்
11. சிறுகரும்பூர் கரும்பாத்தையம்மன் நவரத்தினம்
12. இலட்சுமி உயிர்வருக்கப் பாமாலை.

இங்ஙனம்,

அடியார்க்கடிமை,

A. S. முருகேசன்.